Regd. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone : 420212 6 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P 55



**காரியம்**

பொருள் பாடுபடுபவர்க்கு போய் சேர வேண்டும். சேரும் பொருளைப் பயனுள்ள காரியத் திற்குச் செலவிட வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**கல்வி**

கல்வி என்பது ஒருவன் தனது வாழ் நாளில் சுதந்தரத்தோடு, வாழ் வதற்கு அவனை தகுதி யுள்ளவனாக ஆக்குவதே ஆகும்.

- தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 1-3-1985 வெள்ளி ★ ★ ★ வெளியூர் 2-3-1985 சனி இதழ் 133

## இலங்கையிலிருந்து வரும் அகதிகளின் நிவாரண பணிக்கு உதவுவீர்!

# புரட்சித் தலைவர் கோரிக்கை பிரதமர் ராஜீவ்காந்தி ஏற்றார்





**புதுடெல்லி, மார்ச் 1- இலங்கை தமிழர்கள் அங்கு நடக்கும் கொடுமைகளை கண்டு அஞ்சி தமிழகத்திற்கு ஏராளமான அளவில் அகதிகளாக வருகிறார்கள். அவர்களுக்கு மத்திய அரசு உதவ வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமரிடம் வலியுறுத்தினார். அவர்களுக்கு உதவ 5கோடி ரூபாய் வழங்கவேண்டு மென்று முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமர் ராஜீவிடம் கேட்டுக்கொண்டார். இதை தொடர்ந்து அகதிகளுக்கு உதவும் பொறுப்பை மத்திய அரசு ஏற்றுக்கொண்டுள்ளது.**

சிங்கள ராணுவத்தின் கொடுமைகளைத் தொடர்ந்து ஏராளமான தமிழர்கள் அகதிகளாக தமிழகத்துக்கு வந்தவண்ணம் உள்ளனர்.

இது வரை 12 ஆயிரம் தமிழர்கள் இலங்கையிலிருந்து தமிழகத்திற்கு வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு வேண்டிய உதவிகளை கழக அரசு செய்து வருகிறது.

பிரதமர் ராஜீவ் நேற்று சென்னை வந்த போது முதல்வர் புரட்சித்தலைவர் அவரைச் சந்தித்துப் பேசினார். இலங்கைத் தமிழர் பிரச்கினை குறித்தும், அங்கிருந்து அகதிகளாக வந்துள்ளவர்களின் பிரச்சினை குறித்தும் புரட்சித்தலைவர் பிரதமரிடம் பேசினார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினையை தீர்க்க தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டியதன் அவசியத்தை அப்போது புரட்சித்தலைவர் வலியுறுத்தினார். இலங்கையிலிருந்து 10 ஆயிரத்துக்கும்மேற்பட்டவர்கள் அகதிகளாக வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு உணவும், உடையும் மற்றும் வசதிகளும் அளித்து வருகிறோம். இதற்கு சுமார் 11 கோடி ரூபாய் ஆகிறது.

மத்திய அரசு உடனடியாக முன்பணமாக ரூ.5 கோடி வழங்க வேண்டும் என்று பிரதமரிடம் முதல்வர் புரட்சித் தலைவர் கேட்டுக்கொண்டார்.

### மத்திய அரசு ஏற்பு

முதல்வர் புரட்சித்தலைவரின் வலியுறுத்தலை மத்திய அரசு உடனடியாக ஏற்றுக்கொண்டுள்ளது.

இலங்கையிலிருந்து வரும் அகதிகளுக்கு எல்லா நிவாரண உதவிகளும் அளிக்கும் பொறுப்பை மத்திய அரசு ஏற்றுக் கொள்ளுமென்று தமிழக அரசுக்கு மத்திய அரசு உறுதி அளித்துள்ளது.

அதுமட்டுமின்றி நிவாரண வேலைகளில் ஈடுபட்டுள்ள களப்பணியாளர்களுக்கு ஆகும் செலவு முழுவதையும் மத்திய அரசு ஏற்றுக் கொள்ளு மென்றும், தமிழக அரசின் மறு வாழ்வுத் துறையின் தலைமை நிறுவனத்துக்கு ஏற்படும் செலவில் பாதியை மத்திய அரசு ஏற்றுக் கொள்ளு மென்றும் தமிழக அரசுக்கு உறுதி அளிக்கப்பட்டுள்ளது.

இது சம்பந்தமாக மத்திய உள் துறை இலாகா பத்திரிகைக் குறிப்பு ஒன்றை வெளியிட்டுள்ளது.

மண்டபத்தில் அகதிகளுக்கு உதவ 20 படுக்கைகள் கொண்ட மருத்துவமனை நிறுவப்பட்டுள்ளது. போதிய பாஸ்போர்ட் ஏதுமில்லாமல் அகதிகளாக வரும் இலங்கைத் தமிழர்களுக்கு தாராள

2-ம் பக்கம் பார்க்க

முதல் கட்டமாக நாளை (2-ந் தேதி)

## 4 மாநிலங்களில் 940 தொகுதிகளில் வாக்குப் பதிவு

பாதுகாப்பு ஏற்பாடுகள் தீவிரம்

**புதுடெல்லி, மார்ச் 1- 4 மாநிலங்களில், 940 தொகுதிகளில் நாளை (2 ந் தேதி) வாக்குப்பதிவு நடைபெறுகிறது.**

இந்தியாவில் 11 மாநிலங்களின் சட்ட மன்றங்களுக்கு தேர்தல் நடைபெற உள்ளது தெரிந்ததே இதில் முதல் கட்டமாக மத்திய பிரதேசம், உத்திர பிரதேசம், பீகார், மகாராஷ்டிரா, ஆகிய மாலங்களில், 940 தொகுதிகளில் நாளை (2-ந்தேதி) வாக்கு பதிவு நடைபெறுகிறது.

நாளைய தேர்தலில் 9 ஆயிரத்து 900 வேட்பாளர்கள் போட்டியிடுகிறார்கள்.

நாளைய வாக்குப்பதிவு அமைதியாக நடைபெற அந்தந்த மாநில அரசுகள் தேவையான ஏற்பாடுகள் அனைத்தையும் செய்துள்ளன.

மத்திய பிரதேச முதல்வர், அர்ஜுன்சிங் உத்திரப் பிரதேச முதல்வர் என்.டி. திவாரி, ஆகியோர் போட்டியிடும் தொகுதிகளில் நாளைய தினம் வாக்குப்பதிவு நடைபெறுகிறது.

இந்த 4 மாநிலங்களில் பாக்கியுள்ள தொகுதிகளிலும் மற்றும் ஆந்திரா கர்நாடகா, குஜராத், ஒரிசா, ராஜஸ்தான், இமாசல பிரதேசம் சிக்கிம் புதுவை ஆகிய மாநிலங்களின் சட்ட மன்றத்திற்கும் 5 ந் தேதி வாக்குப்பதிவு நடைபெறுகிறது.

## அமைச்சர் கார் மீது கல் வீச்சு

வார்த்தா, மார்ச். 1-

வார்தா, நகரில் புதன் கிழமையன்று, பாதுகாப்பு அமைச்சர் பி.வி. நரசிம்மராவ் சென்ற கார்மீது எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த சிலர் கற்களை வீசி கலாட்டாசெய்தனர். இதனால் அவர் சென்ற கார் சிறிது சேதம் அடைந்தது இது குறித்து போலீசார் வழக்கு பதிவு செய்து விசாரணை நடத்தி வருகின்றனர்.



## ஜனநாயகம் நிலைக்க கழக அணியை ஆதரிப்பீர்

### டாக்டர் நாவலர் பேருரை

**பாண்டிச்சேரி, மார்ச் 1- இந்தியாவில் ஜனநாயகம் நிலைக்கவும், உலக அரங்கில் இந்தியா உயரவும் இந்திரா காங்கிரஸ் - கழகக் கூட்டணி வேட்பாளர்களை ஆதரிப்பீர் என்று தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் வேண்டுகோள் விடுத்தார்.**

பாண்டிச்சேரி உப்பளம் மைதானத்தில் பிரதமர் ராஜீவ்காந்தி கலந்து கொண்ட தேர்தல் பிரச்சார கூட்டத்தில் தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கலந்து கொண்டார். அவர் பேசியதாவது:—

பிரதமர் ராஜீவ்காந்தி மீண்டும் ஒருமுறை பாண்டிச்சேரியில் தேர்தல் பிரச்சாரம் செய்ய வந்துள்ளார். நாடாளுமன்றத் தேர்தலின் போது அவரது வேண்டுகோளையும் விளக்கத்தையும் கேட்டீர்கள். அதன்படி பாராளுமன்றத்தேர்தலில் வெற்றியையும் தேடித்தந்தீர்கள்.

பாராளுமன்றத் தேர்தலில் எப்படி வெற்றியைத் தேடித்தந்தீர்களோ அது போல இந்தசட்டசபைத் தேர்தலிலும் வெற்றி தேடித்தர வேண்டும் என்று வாக்காளர் பெருமக்களை கேட்டுக் கொள்கிறேன்.

இந்தியாவில் ஜனநாயகம் நிலைக்க வேண்டும். உலக அரங்கில் இந்தியா உயர வேண்டும் என்பதில் இ. காங்கிரஸ் கட்சி உறுதியோடு இருக்கிறது. கடந்த தேர்தலைப் போலவே இந்த தேர்தலிலும் இ. காங்கிரசோடு கூட்டணி சேர்ந்து நாங்கள் ஒர அணியில் நின்று போட்டியிடுகிறோம்.

இ. காங்கிரஸ் 20 இடங்களில் போட்டியிடும் பாங்கையும், கழகம் 10 இடங்களில் போட்டியிடும் பாங்கையும் பெற்றுள்ளதை நீங்கள் நன்றாக அறிவீர்கள்.

தமிழ்நாட்டில் கழகம் எப்படி ஆட்சிப் பொறுப்பு ஏற்றதோ, அதேபோல பாண்டிச்சேரியில் இந்திரா காங்கிரஸ் ஆட்சி பொறுப்பு ஏற்கவேண்டும் என்பது எங்கள்விருப்பம்.

இந்திரா காங்கிரஸ்-கழகம் கூட்டணியில் போட்டியிடும் அத்தனை வேட்பாளர்களையும் வெற்றி பெறச் செய்ய வேண்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் டாக்டர் நாவலர் பேசினார்.

பாண்டிச்சேரி மாநில இந்திராகாங்கிரஸ் தலைவர் பி. சண்முகம் எம். பி. பேசுகையில் கூறியதாவது!—

பாண்டிச்சேரி மாநிலம் தனித்தன்மையோடு இருக்கவும், முன்னேற்றம் அடையவும் மறைந்த பிரதமர் இந்திராகாந்தி அக்கறை காட்டிவந்தார். அதுபோ

2-ம் பக்கம் பார்க்க

## அகதிகளுக்கு நிவாரணம்: மத்திய அரசிடம் கழக அரசு வற்புறுத்தல்

தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் நிருபர்களிடம் கூறியதாவது:-

இலங்கையிலிருந்து நேற்றுவரை 11 ஆயிரத்து 998 பேர் வந்திருக்கிறார்கள். நேற்று மட்டும் 1031 பேர்வந்துள்ளனர்,

இலங்கையிலிருந்து வரும் அகதிகளின் பிரச்சினையை நேரில் கண்டறிய அதிகாரி யு. எஸ், நடராசன் சென்றுள்ளார்.

இலங்கை அகதிகளின் முழுசெலவையும் மத்திய அரசே ஏற்க வேண்டுமென்று கோரியுள்ளோம். மொத்தம் 11 கோடி ரூபாய் அதற்குத் தேவைப்படும். முதல்தவணையாகரூபாய் 5 கோடி கேட்டிருக்கிறோம்,

அகதிகளைத் தங்க வைக்க ஆங்காங்கு கொட்டகைகள் போடப் படுகின்றன.

இலங்கையிலிருந்து வரும் அகதிகளுக்கு மாதாந்திர உதவித் தொகை மலிவு விலையில் அரிசி, கோதுமை வழங்கப்படுகிறது.

இவ்வாறு சொக்கலிங்கம் கூறினார்.



## புனிதர் புரட்சித்தலைவரின் வழி நடப்போம்
## புதுவை மண்ணிலும் வெற்றிக்கொடி பிடிப்போம்!

## பிரதமர் ஏற்றார்...

(1-ம் பக்க தொடர்ச்சி)

மாக உதவிகள் வழங்கப்படுகின்றன.

வந்தவுட்னேயே அவர்களுக்கு காபி, பால், சாப்பாடு, போன்றவற்றைக் கொடுத்து விருந்தாளிகளைப் போல் அரசு உபசரிக்கிறது.

பின்னர் அவர்கள் முகாம்களுக்கு அழைத்துச் செல்லப்படுகிறார்கள்.

முகாம்களில் பெரியவர்களுக்கு ரூ. 110ம் முதல் குழந்தைகளுக்கு ரூ. 55 வீதமும் அடுத்த குழந்தைகளுக்கு ரூ.27.50 வீதமும் வயது வந்தவர்களுக்கு ரூ.82.50 வீதமும் மாதா மாதம்வழங்கப்படுகிறது. இவர்களுக்கு 1 கிலோ அரிசி 57 பைசா வீதம் வழங்கப்படுகிறதுகோதுமை 1 கிலோ 57 காசுக்கு வழங்கப்படுகிறது.

மத்திய புனர் வாழ்வு இலாகா சிபாரிசுப்படி மத்திய அரசு இந்த நிவாரணப் பணிகளுக்கு ரூ.30 லட்சம்ஏற்கெனவே வழங்கியுள்ளது. மேலும் ரூ.30 லட்சத்தை வழங்க இருக்கிறது.

## புரட்சித்தலைவரின் 'நம்நாடு' திரைப்பட வெளியீட்டு ஊர்வலம்

சென்னை, மார்ச் 1— புரட்சித்தலைவர் நடித்த 'நம் நாடு' திரைப்படம் இன்றுசென்னை திருவல்லிக்கேணி ஸ்டார் திரையரங்கில் வெளியிடப்பட்டது.

கடந்த6ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது இந்த படம் சென்னையில் திரையிடப்படுகிறது.

'நம்நாடு' படவெளியீட்டையொட்டி சென்னை அண்ணா சிலையிலிருந்து படப்பெட்டி ஊர்வலமாக கொண்டு செல்லப்பட்டது.

அமைச்சர் கே.ஏ.கே. தலைமையில் குடிசை மாற்றுவாரியத் தலைவர் என்.வி.என். செல்வம், மதுசூதனன் எம்.எல்.சி., வி. ராஜ்குமார், எம்.சி.ரவீந்திரன், சேகர், பொன். வேதமுத்து. பி.கே.ரவி, திருவள்ளுவன், பாஸ்கர், கலைமணி, மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

வாணவேடிக்கை பாண்டு வாத்தியம் முழங்க ''நம் நாடு'' படப்பெட்டிஅலங்கரிக்கப்பட்ட காரில் கொண்டு செல்லப்பட்டது.

பிரும்மாண்டமான ஊர்வலத்தில் 5000க்கும் மேற்பட்ட மக்கள் கலந்து கொண்டனர்.

ஸ்டார் திரையரங்கு வாசலில்எம்.சி.ரவீந்திரன் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் அமைச்சர் கே. ஏ. கே., என். வி. என். செல்வம், மதுசூதனன் எம்.எல்.சி, மற்றும் பலர்பேசினர்.

படவெளியீட்டையொட்டி திரையரங்கு நிர்வாகிகள், படவெளியீட்டாளர், ஊழியர்கட்கு அமைச்சர் கே. ஏ. கே. கேடயங்கள், பதக்கங்கள் வழங்கினார்.

## தருமபுரியில் 271 இலங்கை தமிழர்களுக்கு மறுவாழ்வு

தருமபுரி, மார்ச் 1— இலங்கையில் இருந்து வந்துள்ள 51 தமிழ் அகதிகள் குடும்பங்கள் தருமபுரி வந்துள்ளன.

மொத்தம் 51 குடும்பங்களில் 271 பேர் உள்ளனர். இவர்களில் 21 குடும்பத்தினர் வாணியாறுஅணைக்கட்டுப்பகுதி முகாமிலும் மற்றவர்கள் கேள்வர் பள்ளி அணைக்கட்டுபகுதியிலும் தங்கவைக்கப்பட்டுள்ளனர்.

இவர்களுக்கு தேவையான வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

## போலீஸ் கமிஷனர் ஸ்ரீபாலுக்கு 'கலை இலக்கிய காவலர்' விருது

சென்னை, மார்ச் 1— சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபாலுக்கு ''கலை இலக்கியகாவலர்'' என்ற விருதை அமைச்சர் கே. ஏ. கே. வழங்கினார்.

எல். வி. ஆர். அறக்கட்டளை சார்பில் சமுதாய கூடத் திறப்பு விழாவும், போலீஸ் கமிஷனர் ஸ்ரீபாலுக்கு பட்டம் வழங்கு விழாவும் கோட்டூர்புரத்தில் முன்னாள்உயர்நீதிமன்ற நீதிபதி ராமபிரசாத் ராவ் தலைமையில் நடைபெற்றது.

விழாவில் போலீஸ் கமிஷனர் ஸ்ரீபாலுக்கு ''கலைஇலக்கியகாவலர்'' என்ற பட்டத்தையும், தமிழில் சிறந்த இலக்கிய கர்த்தாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்கான ரூ10 ஆயிரம் ரூபாய்பரிசையும் அமைச்சர் கே. ஏ. கே. வழங்கினார்.

எல், வி. ஆர். சமுதாயக் கூடத்தை அமைச்சர் ஆர் எம். வீ திறந்து வைத்து பேசினார்.

விழாவில் டாக்டர் கே. வெங்கட சுப்பிரமணியம் எம். எல். ஏக்கள் சைதை துரைசாமி, ஆறுமுகம், சந்தசாமி ஆகியோர் கலந்து கொண்டனர்.

பாராட்டுக்கு நன்றி தெரிவித்துப் போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் பேசினார், தொடக்கத்தில் அனைவரையும் எல். வி. ராமையா வரவேற்றார்.

## நாவலர் பேருரை...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

லவே அவரதுமகன் ராஜீவ் காந்தியும்அக்கறைகாட்டி வருகிறார்.

### பிரதமரின் இதயம்

ராஜீவ்காந்தி கடந்த முறை வந்தபோது, இந்திராகாந்தி பாண்டிச்சேரியைத் தன்இதயத்தில் வைத்து இருந்தார் அது போலவே நானும் இதயத்தில் வைத்து இருக்கிறேன். 6 லட்சம் மக்களைக் கொண்ட இந்த மாநிலம் தனித்தன்மையோடுவிளங்கும் என்று உறுதி கூறினார்.

எதிர்க் கட்சிகள் இங்கு தேர்தல் வராது என்றும், பாண்டிச்சேரி மாநிலப் பகுதிகளை அண்டை மாநிலங்களுடன் இணைத்து விடுவார்கள் என்றும் பேசியவைகளை பொய்யாக்கும் வகையில் தேர்தல் வந்துள்ளது. இந்த தேர்தலிலும் எங்கள் கூட்டணியை வெற்றி பெற செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு சண்முகம் எம். பி. பேசினார்.

இந்தக்கூட்டத்தில், மாநில கழக செயலாளர் பி. கே. லோகநாதன், மாநில இளைஞர்இந்திரா காங்கிரஸ் தலைவர் பி. கண்ணன், முன்னாள்சபாநாயகர்பருக்மரைக்காயர் முன்னாள் துணை சபாநாயகர் எல். மரியதாஸ் மத்திய சமூக நல மந்திரி மரகதம் சந்திரசேகர், வைஜயந்திமாலா எம்.பி. திண்டிவனம்ராமமூர்த்தி, எம். பி, குடந்தை ராமலிங்கம், நடிகை ராஜ்மல்லிகா, தமிழ் நாட்டு எம். எல். ஏக்கள் வேணுகோபால், பா. வளர்மதி ஆகியோரும் கலந்து கொண்டனர்.

தமிழக அரசின்

## கட்டாயலெவி சரியே; கோர்ட் தீர்ப்பு

புதுடெல்லி. மார்ச் 1- தமிழக அரசின் கட்டாய லெவிகொள் முதல் நடவடிக்கை சரியானதே என்று சுப்ரீம்கோர்ட் தீர்ப்பு வழங்கியுள்ளார்.

தமிழகஅரசின்கட்டாய லெவி கொள் முதலை எதிர்த்து சுப்ரீம் கோர்ட்டில் மனு ஒன்று தாக்கல் செய்யபட்டிருந்தது. இந்த மனுவை விசாரித்த நீதிபதிகள் ஏ, பி. சென், ஏ. வரதராசன் பாலகிருஷ்ண எராடி ஆகியோர் தமிழக அரசின் கட்டாய லெவி கொள் முதல் சரியானதே என்று தீர்ப்பு வழங்கினர், ஒருஇடத்திலுள்ளபற்றாக்குறையை சமாளிக்க அதிக விளைச்சல் உள்ள பகுதிகளில்கட்டாய லெவி கொள்முதல் செய்ய அரசுக்கு அதிகாரம்உண்டு என்றும் தங்கள் தீர்ப்பில் நீதிபதிகள் கூறியுள்ளனர்.

ஆண்டுதோறும்

## சிறந்த மாணவர்களை டெல்லிக்கு அழைத்து செல்ல திட்டம்

### பெ. செல்வேந்திரன் எம். பி. தகவல்

**பெரியகுளம், மார்ச். 1- பெரியகுளம் நாடாளுமன்றத் தொகுதியில் 10, 12 வது வகுப்பு மாணவர்களிடையே போட்டி வைத்து வெற்றிபெறும் 3 மாணவர்களை டெல்லிக்கு அழைத்து சென்று நாடாளுமன்ற நடவடிக்கைகளை காண தன் சொந்த செலவில் ஏற்பாடு செய்யப்படும் என்று பெ. செல்வேந்திரன் எம். பி தெரிவித்துள்ளார்.**

பெரியகுளம் பாராளுமன்ற கழக உறுப்பினர் பெ.செல்வேந்திரன் பெரியகுளம் பாராளுமன்ற தொகுதியில் உள்ள 6 சட்டமன்றத் தொகுதிகளுக்கும் சென்று நன்றி தெரிவித்து வருகிறார்.

புரட்சித்தலைவர் வெற்றி பெற்ற ஆண்டிபட்டிசட்டமன்றதொகுதியில் நன்றி அறிவிப்பு கூட்டங்களில் பேசினார். அப்போது அவர் பேசியதாவது:-

தமிழ்நாட்டில் எத்தனையோ தலைவர்கள் இருந்திருக்கிறார்கள் ஆனால்ஒருதலைவர் உயிர் வாழ தமிழகமே பிரார்த்தனைசெய்த அற்புதமான காட்சியை இப்போது தான் நாம்பார்த்தோம்.

புரட்சித்தலைவருக்கு ஆபத்து என்றவுடன் தமிழகமே துடித்தது. ஆண்டவாளங்கள் உயிரை எடுத்துகொள் எம்.ஜி.ஆர் உயிரை காப்பாற்று என்பது தமிழகத்தின் தேசிய கீதமாக ஒலித்ததுபலபேர் உயிர் தியாகம் செய்தனர், மருத்துவர்களின் அற்புதமான சிகிச்சையினாலும், மக்களின் பிரார்த்தனையாலும் புரட்சித்தலைவர் மூன்றாவதுபிறவியெடுத்து மூன்றாவது முறையாக தமிழகத்தின் முதல்வர் பொறுப்பினை ஏற்றுள்ளார்.

### ரோஜா ராஜா

தேர்தல் நேரத்தில் தமிழகத்தின்முதல்வராகப் புரட்சித்தலைவரும், இந்தியாவின் பிரதமராக ராஜீவ் காந்தியும் தொடர்ந்து பணியாற்ற வாக்களிக்க கேட்டோம். அதே போல் நீங்கள் மகத்தான வெற்றியைத் தேடி தந்து உள்ளீர்கள்.

ராமாவரம் தோட்டத்து ரோஜா இந்தநாட்டிற்கு ராஜா என்று மூன்றாவது முறையாக புரட்சித்தலைவரை முதல்வராக்கி ஒரு சரித்திர சாதனையைஉருவாக்கி இருக்கிறீர்கள்.

கருணாநிதிக்கு இனி எதிர்காலம் இல்லை சிந்திக்கும் சக்தி உள்ள திமுகவினர் சிறந்த முடிவெடுக்க வேண்டுகிறேன்.

பெரியகுளம்பாராளுமன்ற தொகுதியில்உள்ள கம்பம் பெரியகுளம், தேனி, போடி, சேடபட்டி ஆண்டிபட்டி ஆகிய 6 சட்டமன்ற தொகுதியில் உள்ள மேல் நிலைப் பள்ளியில் படிக்கும் மாணவர்களில் 10-வது வகுப்பு. 12-வது வகுப்பு மாணவர்களில் முதல் மார்க் வாங்கும் மாணவர்களை ஆறுசட்டமன்றதொகுதியிலிருந்தும் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு பேச்சு போட்டி வைத்து பேச்சு போட்டியில் வெற்றி பெறும் முதல் மூன்று மாணவர்களை என்னுடைய சொநத செலவில் பாராளுமன்ற நடவடிக்கைகளைக் காண டில்லி பாராளுமன்றம் அழைத்துச் செல்வேன் மூன்று மாணவர்களை டில்லியில் உள்ள சுற்றுலா இடங்களுக்கும் அழைத்து போவேன். இவ்வாறு பெ.செல்வேந்திரன் எம்.பி.கூறினார்.

செல்வேந்திரனுடன் ஆண்டிப்பட்டி ஒன்றியச் செயலாளர்கள் வழக்கறிஞர்கள் பாண்டித்துரை' முத்தையா, மாவட்ட எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் எஸ்.பி.எம். செய்யது கான், வழக்கறிஞர் கா.தவசி, ஏ. கோபால்சாமி, கூடலூர் முத்து க்ணேசன், யா்வின், வடுகப்பட்டி பாண்டிய ராஜ் மற்றும் பலர் சென்றனர்.

திருச்செந்தூர்

## நெல்லை ரயில் பாதையில் நாசவேலை

திருநெல்வேலி, மார்ச்.1 நெல்லை-திருச்செந்தூர் ரயில் பாதையில் நாசவேலை நடந்துள்ளது. கண்டுபிடிக்கப்பட்டுள்ளது ஸ்ரீ வைகுண்டம் செய்துங்கநல்லூர் ரயில் நிலையங்களுக்கிடையே 100 கஜ நீளத்திற்கு தண்டவாள இணைப்பு தகடுகள் அகற்றப்பட்டுள்ளன.

இது சதி வேலையாக இருக்கும் என்று கருதப்படுகிறது.

ரயில்வே பாதுகாப்பு படையினர் அந்த இடத்திற்கு விரைந்துள்ளனர், இதனால் நெல்லை-திருச்செந்தூர் இடையே ரயில் ரத்து செய்யப்பட்டுள்ளது.

## மத்திய அமைச்சர் மரகதம் சந்திரசேகருக்கு வரவேற்பு

சென்னை, மார்ச் 1— மத்திய மகளிர் சமூக நலத்துறை அமைச்சர் மரகதம் சந்திரசேகருக்கு நாளை (2-ந் தேதி) மாலை 6 மணிக்கு சென்னையில் வரவேற்பு அளிக்கப்படுகிறது.

இந்திரா காந்தி சோஷலிச பேரவை சார்பில் சென்னை 3ல் உள்ள ஏகாம்பரேஸ்வரர் அக்ரஹாரம் தெரு, ஸ்ரீமகேஸ்வரி பவனில் வரவேற்பு தரப்படுகிறது. எம்.ஜோதி தலைமை வகிக்கிறார்.

விழாவில் அமைச்சர் ஆர். எம், வீ., எம். பக்தவத்சலம், எம். பழனியாண்டி சிவாஜிக்ணேசன் எம். பி., உ. சுப்பிரமணியம், தங்கபாலு, ஜேப்பியார் எம்.எல்.சி. யசோதா, அனந்தநாயகி, மணிவர்மா, தளபதி சண்முகம், வி. ராஜசேகரன், சிவராமன், ராஜாமணி, அபூபக்கர், மற்றும் பலர் பேசுகிறார்கள்.

மத்திய அமைச்சர் மரகதம்சந்திரசேகர் ஏற்புரை வழங்குகிறார்.



பிஜித் தீவுத் தமிழர்களுக்கு

## 20 ஆயிரம் தமிழ் புத்தகங்கள் இலவசமாக அளிப்பு

### புரட்சித்தலைவர் அரசு நடவடிக்கை

**சென்னை, மார்ச் 1- பிஜித்தீவுத் தமிழர்களுக்கு 20 ஆயிரம் தமிழ் புத்தகங்களை அன்பளிப்பாக வழங்க புரட்சித்தலைவர் அரசு அனுப்பி வைக்கிறது.**

சென்னை, மார்ச். 1- பிஜித்தீவுத்தமிழர்களுக்கு புரட்சித் தலைவர் அரசு 60 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள 20 ஆயிரம் தமிழ்புத்தகங்களை இலவசமாக அனுப்புகிறது.

அங்குள்ள தமிழர் குழந்தைகளுக்கு தமிழை பயிற்றுவிக்க தமிழகத்தில் இருந்து 5 ஆசிரியர் தம்பதிகள் செல்லுகிறார்கள். இதனை தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் தெரிவித்தார். அவர் மேலும் தெரிவித்ததாவது:-

பிஜித் தீவில் உள்ள இந்திய சன்மார்க்க இலக்கிய சங்கம், இந்த தமிழ் புத்தகங்களை அளித்து உதவுமாறு தமிழக அரசிடம் கேட்டுக் கொண்டது. அதன்படி 20 ஆயிரம் புத்தகங்கள் அனுப்பப்படுகிறது.

இவ்வாறு சொக்கலிங்கம் தெரிவித்தார்.

## ஆந்திராவில் வேட்பாளர் படுகொலை

நெல்லூர், மார்ச் 1- ஆந்திர மாநிலத்தில் காவாலி சட்டமன்றத் தொகுதியில் போட்டியிடும் வேட்பாளர் பால கிர்திகோத்தையா நேற்றிரவு கத்தியால் குத்திப் படுகொலை செய்யப்பட்டார்.

போட்டி தெலுங்கு தேசக்கட்சி வேட்பாளராக இவர் போட்டியிட்டார். இந்தத் தொகுதியில் தேர்தல் ஒத்திவைக்கப்படும்.

## பெண்களிடம் செயின் அறுத்த வாலிபன்கைது

சென்னை, மார்ச் 1— சென்னையில் பெண்களிடம் செயின் அறுக்கும் வாலிபன்ஒருவனைப் போலீசார் கைது செய்துள்ளனர்.

மயிலாப்பூரைச் சேர்ந்தவன் பூங்காவனம் என்கிற குப்பன் (வயது 29) இவன்ரோட்டில் நடந்து செல்லும்பெண்களிடம்கத்தியைக் காட்டி மிரட்டி செயினை பறித்து சென்று விடுவான். இவனை மயிலாப்பூர் குற்றப்பிரிவு இன்ஸ்பெக்டர் பாலகிருஷ்ணன் கைது செய்து 25 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகளைகைப்பற்றியுள்ளார். இவன் ஏற்கனவே 8முறை ஜெயிலுக்கு சென்றவன் என்று விசாரணையில் தெரியவந்துள்ளது.

## குடும்பத் தகராறு குழந்தைகளுடன் தாய் தற்கொலை

சென்னை, மார்ச், 1- சென்னை மேற்கு மாம்பலம், மேட்டுப்பாளையம் குடியிருப்புப் பகுதியில், ஒருகிணற்றில், கலா(வயது 25) மற்றும் கலாவின் குழந்தைகள் ராஜா (வயது 2) ரேகா (வயது1) ஆகியோர்களின் உடல்கள் மிதந்தன,

போலீசார் பிணங்களைப்பற்றி பிரேத பரிசோதனைக்காக அனுப்பி மேற்கொண்டு விசாரணை நடத்தி வருகிறார்கள்.

தனிக் குடித்தனம் போவது குறித்து ஏற்பட்ட தகராறில், கிணற்றில் குதித்து கலா தன் குழந்தைகளுடன் தற்கொலை செய்து கொண்டதாக கூறப்படுகிறது.

கோவை மாவட்ட

## பாக்யராஜ் மன்றத்தினர் ரத்ததானம்

கோவை, மார்ச் 1— கோவை மாவட்ட பாக்யராஜ் தலைமை ரசிகர் மன்றத்தின் நிர்வாகிகள் கூட்டம் இரா. சுந்தரம் தலைமையில் நடைபெற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் நலமுடன் திரும்பியதை யொட்டி பாக்யராஜ் ரசிகர் மன்றத்தினர் ரத்ததானம் செய்வது என்று முடிவு எடுக்கப்பட்டது.

தேர்தலில் வெற்றி பெற்ற, கழகஅணி எம்.பி., எம். எல். ஏ. க்களுக்கு வரும் 7-ந்தேதி பாராட்டு விழா நடத்த முடிவு செய்யப்பட்டது.

காபி வாரிய உறுப்பினராக

## ராமகிருஷ்ணன் நியமனம்

சென்னை, மார்ச் 1— இந்திய காபி வாரியத்தின் நிர்வாக குழு அங்கத்தினராக ஆர். ராமகிருஷ்ணன் எம். பி. தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

## மான்சிங் கொலை: விசாரணை துவக்கம்

புதுடெல்லி, மார்ச் 1- ராஜஸ்தானில் சுயேச்சை வேட்பாளர் ராஜா மான்சிங் மரணம் குறித்து மத்திய புலனாய்வுத்துறை தனது விசாரணையை துவக்கியது. மத்திய புலனாய்வுத் துறையின் குழு பரத்பூர் போய் சேர்ந்ததாகவும், அந்தக் குழு மான்சிங் மரணம் குறித்து முழு விவரங்களையும் ஆராயும்என்றும் உயர் அதிகாரி ஒருவர் கூறினார்.

## கழக கூட்டணிக்கு உழைப்பாளர் கட்சி ஆதரவு

சென்னை, மார்ச் 1- பாண்டிச்சேரி பொதுத் தேர்தலிலும், திருப்பத்தூர் இடைத்தேர்தலிலும் கழகம்-இந்திரா காங்கிரஸ் கூட்டணியை ஆதரிக்க உழைப்பாளர் முன்னேற்ற கட்சி முடிவு செய்துள்ளது என்று ஒரு அறிக்கையில் மார்க்கபந்து கூறியுள்ளார்.

## சினிமா எக்ஸ்பிரஸின் சிறந்த கலைஞர்கள்

சென்னை, மார்ச் 1— 1984-ம் ஆண்டுக்கான சிறந்த சினிமா கலைஞர்களை தேர்ந்தெடுத்து சினிமா எக்ஸ்பிரஸ் பத்திரிகை பரிசு வழங்குகிறது.

சினிமா எக்ஸ்பிரஸ் பத்திரிகை ஆண்டுதோறும் தென்னிந்திய மொழிப் படங்களில் சிறந்த கலைஞர்களை தேர்வு செய்து பரிசு வழங்கி வருகிறது. ஐந்தாவது ஆண்டாக 1984-ம் ஆண்டுக்கான சிறந்த கலைஞர்களைதேர்வுசெய்துள்ளது.

1984ம் ஆண்டுக்கான சிறந்த படமாக சிறையையும் சிறந்த நடிகராக ரஜினிகாந்தையும் தேர்ந்தெடுத்து சினிமா எக்ஸ்பிரஸ் பரிசு வழங்குகிறது.

சினிமா எக்ஸ்பிரசின் 1984ம் ஆண்டுக்கான சிறந்த நடிகையாக சுஜாதாவும், சிறந்த புதுமுக நடிகராக முரளியும், புதுமுக நடிகையாக ஜீவிதாவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

சிறந்தடைரக்டர் விருதை எஸ். பி. முத்துராமனும், சிறந்த இசையமைப்பாளர் விருதை இளையராஜாவும், சிறந்த ஒளிப்பதிவாளர் விருதை பாலுமகேந்திராவும், சிறந்த பின்னணிப் பாடகர் விருதை எஸ். பி. பாலசுப்பிரமணியமும் பெறுகின்றனர்.

நகைச்சுவை ஜோடிக்கான சிறந்த விருது கவுண்டமணிக்கும் மனோரமாவுக்கும் வழங்கப் படுகிறது,

தெலுங்கில் சிறந்த படமாக கலாதியும், மலையாளத்தில் சிறந்த படமாக ஏப்ரல் 18ம், கன்னடத்தில் சிறந்த படமாக பந்தனாவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

தெலுங்கில் சிறந்த நடனக்கானவிருது ரேலதிக்கும், மலையாளத்தில் சிறந்த நடிகைக்கான விருது ஸ்ரீவித்யாவுக்கும் கன்னடத்தில் சிறந்த நடிகைக்கான விருது சுகாசினிக்கும் வழங்கப்படுகிறது.

இந்த பரிசளிப்பு விழா நிகழ்ச்சி மேமாதம் 1 ந்தேதி மியூசிக் அகாடமியில் நடைபெறுகிறது. கலைவிழா பற்றிய முழு விவரங்களை பின்னர் அறிவிப்பதாக சினிமா எக்ஸ்பிரஸ் ஆசிரியர் ராமமூர்த்தியும், நிர்வாகத்தினரும் தெரிவித்துள்ளனர்.

அம்பாசங்கர் கமிஷன்

## அறிக்கை தாக்கல்

சென்னை, மார்ச் 1- பிற்படட்டோர் நலம்பற்றி விசாரணை செய்து அறிக்கை தாக்கல் செய்ய அம்பா சங்கர் தலைமையில் ஒருகுழு அமைக்கப்பட்டிருந்தது.

அக்குழு தனதுஅறிக்கையை நேற்று அரசிடம் தாக்கல் செய்துள்ளது.

முன்னாள் மத்திய அமைச்சர்

## சையத்முகமது காலமானார். ஜனாதிபதி அனுதாபம்

புதுடெல்லி, மார்ச் 1- முன்னாள் மத்திய சட்ட இணை அமைச்சராகவும், இங்கிலாந்தில் இந்தியத் தூதராகவும் பணியாற்றிய வருமான சையத் முகமது காலமானார். அவருக்கு வயது 61.

பாரடைப்பு காரணமாக, டெல்லி விஞ்ஞான மருத்துவக்கல்வி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட சையத் சிகிச்சை பயன் அளிக்காமல் இறந்தார்.

சையத் முகமதுவின் உடல் கேரள மாநிலத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு, அவரது சொந்த ஊரில் இறுதி சடங்குகள் நடைபெறும்.

சையத்முகமதுவின்மறைவிற்கு ஜனாதிபதி ஜைல்சிங் அனுதாபம் தெரிவித்துள்ளார்.

தலைசிறந்த வழக்கறிஞர் ஒருவரை இந்தியா இழந்துவிட்டது என ஜனாதிபதிஜைல்சிங்குறிப்பிட்டுள்ளார்.

## ரவுடித்தனம் செய்த யானை: போலீஸ் காவலில் வைக்கப்பட்டது

மதுரை, மார்ச் 1— பேருந்தை யானை தாக்கியதால் பேருந்தின் பின்பக்க கண்ணாடி உடைந்தது. பாகனுடன் யானையும் காவல் துறையினர் வசம்ஒப்படைக்கப்பட்டது.

மதுரையை அடுத்த வாடிப்பட்டியில் ஒருவர் யானையை வைத்து கடை கடையாகச்சென்று காசு இட்லி மற்றும் பல உணவு பொருட்களைப் பெற்று வருகின்றார். வழக்கம் போல் காலையில் யானையுடன் பாகன் சென்று பேருந்து நிலையத்திலும், அதன் பக்கத்தில் உள்ள கடைகளிலும் காசு பெற்றுக் கொண்டு வந்தார்.

யானை சில சமயம் பேருந்தின் ஜன்னல் பகுதி வழியாக துதிக்கையைக் கொண்டு பயணிகளிடம் காசு வசூலிக்கும், அது போல் சம்பவத்தன்றும் நடைபெறுகையில் பேருந்தின் பின்பக்க கண்ணாடியை யானை துதிக்கையால் அடித்து நொறுக்கி விட்டது.

பேருந்தின் ஓட்டுநர் ராஜா யானையுடன் பாகனையும் பிடித்து காவல் துறையினரிடம் ஒப்படைத்தார், காவல் துறையினர் விசாரணை நடத்தி வருகின்றனர்.



# தேர்தல் களம்



★ கச்சத்தீவை இலங்கைக்கு அளிக்க ஒப்புதல் தந்தது தி.மு.க.வே!

★ இலங்கைப் படைகளால் தமிழக மீனவர்கள் தாக்கப்பட வழி வகுத்தவரே கருணாநிதிதான்!

## இலங்கைத் தமிழர் பிரச்சினையில்

# கருணாநிதி மோசடி

## "தேர்தலில் தக்க பாடம் புகட்டுவீர்!"
## புதுவைமக்களுக்கு அமைச்சர் காளிமுத்து கோரிக்கை

பாண்டிச்சேரி, மார்ச் 1- கச்சத்தீவை இலங்கைக்கு அளிக்க ஒப்புதல் தந்து அதன்மூலம், தமிழக மீனவர்களை இலங்கைப் படைகள் தாக்க வழி வகுத்தவரே கருணாநிதிதான் என அமைச்சர் காளிமுத்து குற்றம்சாட்டினார்.

இலங்கைத்தமிழர் பிரச்சினையில் இரட்டை வேடம் போடும் கருணாநிதிக்கு புதுவை மக்கள் தக்க பாடம் புகட்ட வேண்டும் எனவும் அமைச்சர் காளிமுத்து கேட்டுக் கொண்டார்.

ராமனை அடைய விரும்பிய சூர்ப்பனகை அது முடியாமல் போகவே- லட்சுமணனிடம் சென்று "நீயாவது என்னைத் திருமணம் செய்து கொள்" என்று கேட்டு மூக்கறுபட்டதுபோல தமிழக ராமனிடம் தோற்ற கருணாநிதி எனும் சூர்ப்பனகை புதுவை லட்சுமணனிடம் வந்து நிற்கிறார். என்றும் இலக்கிய நயம் சொட்டச் சொட்டப் பேசினார் அமைச்சர் காளிமுத்து.

புதுவையில் கழக அணி வேட்பாளர்களை ஆதரித்து அமைச்சர் காளிமுத்துபல்வேறுஇடங்களில் நடந்த தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் பங்கேற்றுப் பேசினார்.

அமைச்சர் காளிமுத்து பேசியதாவது:-

மார்ச் 5ந் தேதி இங்கு நடைபெறும் சட்டமன்ற தேர்தலில்கழக-காங்கிரஸ் அணி வேட்பாளர்களுக்கு வாக்களிக்க உங்களைக் கேட்டுக் கொள்வதற்காக இங்கு வந்துள்ளேன்.

தமிழகத்தில் கழகமும், இந்திரா காங்கிரசும் கூட்டணி அமைத்துப் போட்டியிட்டு, மகத்தான வெற்றி கண்டது. தமிழகத்தில் ஏற்பட்ட கூட்டணி சிறிதும் ஊனமின்றி, புதுவையிலும் உங்களை சந்திக்கிறது. ஆனால் தமிழகத்தில் கூட்டணி அமைத்துப் போட்டியிட்ட ஜனதா-தி.மு.க. அணி இங்கு தனித்தனியாக போட்டியிடுவதையும் நீங்கள் காண்கிறீர்கள்.

### தங்கத்தில் பதிந்த வைரம்

தங்கத்தில் பதிக்கப்பட்ட வைரமாக பொதிகை தென்றலில் கலந்து வரும் மல்லிகையின் மணமாக, கழகம், காங்கிரஸ் கூட்டணி இருக்கிறது.

புதுவை மக்களுக்கு நிலையான, நிம்மதியான ஆட்சியை வழங்குவது எங்கள் அணியின் பொதுத் திட்டம், குறிக்கோள் ஆகும்.

புதுவையில்கழகத்துக்கு எதிராக, தி.மு.க. வினர் நச்சுப் பிரச்சாரத்தை கிளப்பிவிட்டனர். புதுவையை தமிழகத்துடன் நாம் இணைத்து விடுவோம் என்ற விஷமப் பிரச்சாரத்தை தி.மு.க. வினர் கிளப்பினர். புதுவையின் தனித்தன்மை எள் முனை அளவும் குன்றாது இருக்க கழகம் பாடுபடும். இதைப் புரட்சித் தலைவரின் கருத்தாக நான் உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

### மகிழ்ச்சி பரவசம்

தமிழர்கள் பெரும்பான்மையாக வாழும் மாநிலம் இது. தமிழர்களுக்கென்று தமிழகத்தை தவிர இருக்கும் மற்றொரு மாநிலம் இது. இந்த மாநிலத்தின் தனித்தன்மையை எந்த விதத்திலும் விட்டுத்தர கழகம்இடம்கொடுக்காது. புதுவையை குட்டி திராவிடநாடாக பார்த்து நாங்கள் மகிழ்கிறோம், பரவசப்படுகிறோம். அதற்கு ஒரு போதும் பாதகம் ஏற்படாது பாதுகாப்போம். இதை எங்கள் கட்சியின் கொள்கையாகக் கூறுகிறேன்.

காங்கிரஸ் ஆட்சிக்கு உறுதுணையாக இருந்து உங்களுக்கு (புதுவை மக்களுக்கு) நல்லது செய்ய நாங்கள் உதவுவோம்.

தமிழகத்தில் கடந்த தேர்தலின் போது, மத்தியில் நிலையான ஆட்சி அமைய ராஜீவிற்கும், மாநிலத்தில் நல்லாட்சிஅமைய புரட்சி தலைவருக்கும் வாக்களியுங்கள் என்று மக்களிடம் வேண்டுகோள் விடுத்தோம். எங்களது வேண்டுகோளை ஏற்று எங்களை ஆதரித்து, ராஜீவ்காந்தி பிரதமராகவும், புரட்சித் தலைவர் முதல்வராகவும் தமிழக மக்கள் வாக்களித்தனர்.

### பதுங்கும் தி. மு. க.

நாங்கள் தான் ஆட்சிக்கு வருவோம் என்று மார்தட்டிய தி. மு. க. எதிர்கட்சி அந்தஸ்து கூட இல்லாது, தமிழக மக்களால் புறக்கணிக்கப்பட்டது.

தமிழக மக்களால் புறக்கணிக்கப் பட்ட தி.மு.க. பாண்டியில் பதுங்கப் பார்க்கிறது. அதற்குஇடம் தராதீர்கள்.

மக்கள் வழங்கிய தேர்தல் முடிவை மக்கள் தீர்ப்பாக ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் இன்னும் கருணாநிதிக்குவரவில்லை

உங்களுக்கு பழைய சம்பவங்களை நினைவூட்ட விரும்புகிறேன். திண்டுக்கல் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் கழகம் மாபெரும் வெற்றி கண்டது உடனே கருணாநிதி சினிமா மாயைவென்றது. அடுத்த தேர்தலில் இது இருக்காது என்றார். அடுத்து புதுவையிலும் கோவையிலும் இடைத் தேர்தல்வந்தது. அதிலும், கழகம் வாகை சூடியது. 77 சட்டமன்றத் தேர்தலில் கழகம் மகத்தான வெற்றி கண்டது. உடனே கருணாநிதி சீக்கிரம் மாயை கலைந்து விடும் என்றார். அடுத்து நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரசுடன் சேர்ந்ததால் தி.மு.க. வெற்றி பெற்றது.

உடனே கருணாநிதி மாயை கலைந்தது. இனி கழகம் வெற்றி பெறாது என்றார். அதற்கு பின்பு 80ம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் கழகம் மகத்தான வெற்றி கண்டது.

### விசித்திர விவாதம்

ஒவ்வொரு நேரத்திலும் கருணாநிதி தனது தோல்விக்கு ஒரு விசித்திர காரணம் கூறுவார். புரட்சித் தலைவர் தி. மு. க. வில் இருந்தபோது, 184 இடங்களைப் பெற்று தமிழகத்தில் ஆட்சி பீடம் அமைத்தது தி.மு.க.

தி.மு.க.வின்வெற்றிக்கு அயராது உழைத்தபுரட்சித் தலைவரைக் கருணாநிதி தூக்கியெறிந்தார்அதற்கு பின் தி. மு. க. 48 இடங்களுக்கு தள்ளப்பட்டது. உலக்கை தேய்ந்து உளிப்பிடி ஆனது போல் ஆனது. அப்போது திமுக கருணாநிதி இது எங்கள் வரலாறு என்றார்.

### திரிந்த பால்

அந்த 48ம் பின் 38 ஆகி இப்போது 22 ஆகி இருக்கிறது, ரசம் போன கண்ணாடியாக உடைந்து போன வாளாக பிரிந்து போன கூடையாகதிரிந்து போன பாலாக தி.மு.க. உள்ளது.

### நாடு துடித்தது

பொய் பிரச்சாரத்தின் மூலம் ஆட்சி நாற்காலியை பிடித்து விடலாம் என்று கருணாநிதி கனவு காணுகிறார். கருணாநிதியின் முயற்சிக்கு இடம் கொடுக்காதீர்கள்.

கழகம், காங்கிரஸ் அணி மகத்தான வெற்றி கண்டதும் அனுதாப அலை வெற்றி பெற்றது என்று கருணாநிதி கூறினார். அனுதாபம் என்பது மக்கள் யார் மீது அதிக நம்பிக்கை வைத்திருக்கிறார்களோ அவர்கள் இறந்து போகும்போதோ அல்லது உடல் நலம் பாதிக்கப்படும் போதோ மக்கள் அனுதாபப்படுவார்கள். இந்தியாவின் பெருமையையும், புகழையும் கட்டிக் காத்த இந்திரா மத வெறியர்களின் வெறிச் செயலுக்கு பலியானபோது நாடு துடித்தது.

### பிரார்த்தனை வெள்ளம்

அது போல் மழலைச் செல்வங்களுக்கு சத்துணவு வழங்கிய வள்ளல் புரட்சித்தலைவர் உடல்நலம் குன்றியதும் நாடு துடித்தது. அந்த சரித்திர நாயகன் உடல் நலம் பெற நாடெங்கும்உள்ளஆலயங்களில் பிரார்த்தனை நடந்தது.

அன்பு மிக்க தலைவர்களுக்கும், அவர்களது கட்சிக்கும் மக்கள் வாக்களிப்பது அவர்கள் மீதுமக்கள் கொண்டுள்ள நம்பிக்கையால்தான்.

தமிழகத்தில்தேர்தலின் போது புரட்சித்தலைவர் படத்தைப் போட்டு ஏமாற்றி தான் வாக்குகளைப் பெற்றுவிடலாம் என்று கருணாநிதி எண்ணினார். புரட்சித் தலைவரைப் பற்றி புகழ்ந்துபேசினார். 12 ஆண்டு பகைமறந்து 40 ஆண்டு கால நட்பு தலை தூக்கி நிற்கிறது என்றார்.

### இடம் தேடும் வியாபாரி

கருணாநிதியின் ஏமாற்று வேலையை மக்கள் நன்கு புரிந்து கொண்டு அவருக்கு சரியான பாடம்தந்தனர். தமிழகத்தில் கதைமுடிந்த தி. மு. க. பக்கத்து மாநிலத்தில் வியாபாரம் நடக்காதா என்று பார்க்கிறது. இதற்கு இடம் தராதீர்கள்.

கருணாநிதி தேர்தலின் போது மக்களிடம் கெஞ்சுவார். அதற்குபின் அவரது குரல் அதிகாரக்குரலாகமாறும், தோல்வி கண்டவுடன் மக்களுக்கு புத்தி இல்லை என்று திட்டித்தீர்ப்பார். ஆனால் புரட்சித்தலைவர் அப்படி இல்லை என்றும் மக்களின் மீதுமாறாதஅன்புகொண்டிருப்பவர். மக்களும் புரட்சித் தலைவர் மீது மாறாத அன்பு கொண்டுள்ளனர். அந்த அன்பு தான் கடும் உடல்நல பாதிப்பிலிருந்து புரட்சித் தலைவரை மீட்டுத் தந்துள்ளது.

மக்களுக்காக வாழ்பவர் புரட்சித்தலைவர். தனக்காக வாழ்பவரல்ல. தன் மீது அன்புகொண்ட மக்களுக்காக இரவு பகல் பாராது, இமை மூடாது உழைத்ததால் தான் உடல் நலம் பாதிக்கப்பட்டார். மக்கள் அன்பால் அந்த நோய் பறந்துவிட்டது.

புரட்சித்தலைவரின் தன்னலமற்ற பணிகளும், சேவைகளும் இங்கும் தொடர கழக அணி வேட்பாளர்களுக்கு வாக்களியுங்கள்.

காங்கிரசுக்கும் கழகத்திற்கும் நீங்கள் அளிக்கும் வாக்கு நாட்டைஒருமைப் படுத்தவும், வலிவான இந்தியா உருவாகவும், புதுவை செழிப்புறவும், வளம்பல பெருகவும், உதவக்கூடியது.

### நவீன சூர்ப்பனகை

தமிழக மக்களால் புறக்கணிக்கப்பட்ட தி.மு.க. இங்காவது இடம் பெற முடியாதா என்றுதவியாய் தவிக்கிறது இதை நினைக்கும் போது எனக்கு சூர்ப்பனகை கதை தான் நினைவுக்கு வருகிறது. ராமனிடத்தில் சென்று சூர்ப்பனகை தன்னை மணம் முடிக்குமாறு வேண்டினாளாம்.

5-ம் பக்கம் பார்க்க

---

மாநிலங்கள் வாரியாக

## வாக்காளர் விவரம்-வாக்குச் சாவடிகள்

| மாநிலத்தின் பெயர் | மொத்த வாக்காளர்கள் | வாக்குச் சாவடிக |
|---|---|---|
| ஆந்திரப் பிரதேச மாநிலம் | 3,45,90,275 | 43,469 |
| பீகார் | 4,06,23,307 (சுமார்) | 56,620 |
| குஜராத் | 1,92,88,643 | 23,331 |
| இமாசலப் பிரதேசம் | 23,56,901 | 4,129 |
| கருநாட்க மாநிலம் | 2,22,83,993 | 30,149 |
| மகாராஷ்டிரா | 3,76,81,684 | 43,605 |
| ஒரிசா | 1,50,37,576 | 19,926 |
| ராஜஸ்தான் | 2,12,31,371 | 26,213 |
| சிக்கிம் | 1,55,041 | 240 |
| உத்திரப்பிரதேசம் | 6,55,17,571 | 74,858 |
| பாண்டிச்சேரி | 3,93,472 | 489 |
| மத்தியப் பிரதேசம் | 2,91,71,924 | 84,010 |

## அண்ணா தொழிற்சங்கப் பேரவை இணைப்பு சங்க நிர்வாகிகளுக்கு

தொழிற்சாலைகளின் இயங்கி வருகிற தொழிற்சாலைகளின் நிர்வாகிகள் தேர்தலை ஆண்டுதோறும் நடத்தி புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற பேரவையின் நடைமுறைக்கு மாறாக, சில ஆலைகளில் நிர்வாகிகள் நியமனம் செய்யப்படுவதாகப் பேரவையின் கவனத்திற்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது. தொழிற்சாலை அளவில் இயங்கி வருகிற சங்கங்களுக்கும், கிளைச் சங்கங்களுக்கும் தேர்தல் மூலம் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பதையும், முறையாக சந்தா செலுத்தியுள்ள உறுப்பினர்கள் அனைவரும் தேர்தலில் பங்கேற்க வாய்ப்பளிக்க வேண்டும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

**வை. பெருமாள்.**

சென்னை-14, பொதுச்செயலாளர்
1—3—85 அண்ணா தொழிற்சங்கப் பேரவை.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS-600029



## இந்திய ஒற்றுமையே புதுவையின் இதயகீதம்
## இரட்டை இலை-கைச்சின்னத்திற்கு அதுவேவேதம்



## கருணாநிதியின் தேசத்துரோக சிந்தனைகளுக்கு...

# புதுவையும் பாடம் புகட்டும்...!

இரண்டு மாத காலமாக இருந்த இடம் தெரியாமல் இருந்த கருணாநிதி பேசத் தொடங்கிய பிறகு - தன்னை முழுமையாகவே அடையாளம் காட்டிக் கொண்டிருக்கிறார்.

நடந்து முடிந்த தேர்தல் களத்தில் கருணாநிதி மீது நாம் என்னென்ன குற்றச் சாட்டுக்களைச் சுமத்தினோமோ, எந்தெந்தக் காரணங்களுக்காகக் கருணாநிதி கும்பலைத் தோற்கடிக்க வேண்டும் என்று எடுத்துக் காட்டினோமோ அவையெல்லாம் உண்மை என்பதற்கு நிரந்தர சாட்சியங்களாக அவரது தற்போதைய பேச்சுக்களும், பிரச்சார முறைகளும் விளங்குகின்றன.

**கருணாநிதியின் அரசியல் அஸ்தமனம் உறுதி செய்யப்பட்டு விட்ட 1984 தேர்தல் களத்தில் அவரை முழுமையாகத் தோலுரித்துக் காட்டினோம்.**

நல்லெண்ணம் படைத்தவர்களும், நாகரிகமானவர்களும் வெறுத்தொதுக்கும் மிக மிகக் கீழ்த்தரமான, கேவலமான பிரச்சார யுக்திகளைக் கையாண்டு தனது அரசியல் வாழ்வின் சவக்குழியைத் தானே தோண்டிக் கொண்ட பெருமையைப் பெற்றவர் கருணாநிதி.

மக்கள் தெளிவான தீர்ப்பை வழங்கினார்கள். "தீர்ப்பு தெளிவாகவே இருக்கும். தமிழகம் என்றென்றைக்கும் புண்ணிய புருஷர் புரட்சித்தலைவர் எம்.ஜி ஆர். பக்கமே" என்று தூரப்பார்வையோடு யதார்த்த நிலையைக் கண்டறிந்து நாம் எழுதினோம்.

பத்திரிகைகள் நடத்திய கேலிக் கூத்துக்களை, சரவித்துவார அரசியல் வாணவேடிக்கைகளை நம்பிய கருணாநிதி - 1980 ஆண்டைப் போலவே - 1984லும் "முதலமைச்சர் நாற்காலி" கனவைக் கண்டார்.

**"அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் 80, 90 இடங்களைப்பெற்று தி.மு.க. 50, 60 இடங்களைப் பெற்றாலும் நான்தான் முதலமைச்சர்" என்று அரசியல் 'கிசுகிசு'க்களை திட்டமிட்டு, செலவழித்துப் பரப்பினார்.**

எந்த மாய வலையிலும் மக்கள்சிக்கவில்லை. 'எங்களுக்கு என்றென்றைக்கும் முதல்வர் மாமனிதர், தவசீலர் புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். தான்' என்று தமிழக மக்கள் ஓங்கிஒலித்தனர்.

"முதலமைச்சர் நாற்காலிக் கனவை விட்டுவிட்டு எதிர்க்கட்சி அந்தஸ்தை பெறவாவது கருணாநிதி முயற்சிக்கட்டும்" என்று நாம் எழுதினோம்.

ஆண்டிப்பட்டி முதல் ஆயிரம்விளக்கு வரை அடித்தது புரட்சித்தலைவரின் வெற்றி அலை. சாதனை அலை, தமிழகம் முழுதும் கருணாநிதியின் கட்சியையும் ஆயிரம்விளக்கில் கருணாநிதியின் குடும்பத்தையும் முறியடித்து மகத்தான சாதனை புரிந்தனர் தமிழக மக்கள்.

இத்தனைக்குப் பிறகும் கூட இன்றைக்கும் கருணாநிதி தன்னைத் திருத்திக்கொள்ளவோ, மக்களை வெறுக்கும் தனது மமதைப்போக்கை மாற்றிக் கொள்ளவோ தயாராக இல்லை.

அதனால்தான் - "கருணாநிதி திருந்த முடியாதவர் - திருந்த விரும்பாதவர்' என்று தமிழக மக்கள் முடிவு செய்துவிட்டனர்.

**மயிலை மாங்கொல்லையில் மிகமிக அதிகமாகவே கருணாநிதியின் வாய் கிழிந்திருக்கிறது மச்சான் மாறன் உடனிருந்ததால் அத்துமீறல் அளவு கடந்து எல்லை மீறிப் போயிருக்கிறது.**

"அனுதாப அலை" பேச்சை கருணாநிதியால் விடமுடியவில்லை. பாவம்! மன சமபல நிலையை இழந்த மனநோயாளியின் மாலை நேரப் புலம்பல்களாக அவரது பேச்சுக்கள் சாட்சியளிக்கின்றன.

**வாதத்திற்காக 'அனுதாப அலை' என்பதை ஏற்றுக் கொண்டாலும் - அது புகழுக்குரியதேயன்றி கேலிக்குரியதன்று.**

**வாழ்கிற போதும் புகழின் இமயமாக விளங்கி- "எனது இந்திய மக்களுக்காக எனது உடலின் கடைசிச் சொட்டுரத்தம் சிந்துவதையே பெருமையாகக் கருதுகிறேன்" என்று கர்ஜித்த சிலமணி நேரங்களில் 24குண்டுகளை தன் இன்னுடலில் தாங்கி தியாகத்திற்கு இலக்கணம் எழுதி மரணத்தைக் கம்பீரமாகச் சந்தித்த மாதரசி இந்திரா.**

தேசபக்த இந்தியன் ஒவ்வொருவனும் அவரைத் தன் அன்னையின் வடிவில் தரிசிக்கிறான்.

அவரது வாழ்வு மட்டுமல்ல, மரணமும் மகத்தானதாக அமைந்தது. உயரிய நோக்கங்களுக்காக உயிரைப் பணயம் வைக்கும் திராணிக்கு, கம்பீரத்திற்கு, மகத்துவத்திற்கு, பெருமைக்கு, தியாகத்திற்கு - அந்த மாதரசி மகுடம் சூட்டிவிட்டுக் கண் மூடினார்.

அவர் வாழ்ந்துகொண்டிருந்தபோது, கண்ணை மூடிக் கொண்டு எதிர்த்தவர்கள்கூட இப்போது கண் திறந்து பார்க்கிறார்கள். அவர் வாழ்ந்த போது முக்கால் பாரதம் அவரோடு இருந்தது. அவரது மறைவு அவரது மகத்துவத்தை உலகிற்கு உணர்த்தியதால் முழு பாரதமும் இப்போது அவரது வழியில் கட்டுண்டு கிடக்கிறது.

ஆனால்... கருணாநிதி "அனுதாப அலை" என்று கேலி பேசுகிறார்.

**காலம் கற்பித்த பாடங்கள் போதவில்லை அவருக்கு.**

**"தூக்கியெறிந்தேன் என்று 'கொக்கரித்த அந்த1972-ம் ஆண்டு எங்கே? காத்து இருக்கிறேன்- கதவைத்திறவுங்கள்" என்று கடிதம் எழுதுகிற 1985 எங்கே?**

இத்தனைக்குப் பிறகும் கருணாநிதியின் வாய்த்திமிர் அடங்கவில்லை.

**கார்க்கி**

இன்றைக்குப் புதுவை மண்ணில் காலூன்றிவிட முடியுமா என்ற சபலத்தில் ஏதேதோ பேசிப் பார்க்கிறார் கருணாநிதி.

**நாம் அன்றைக்கும் சொன்னோம், இன்றைக்கும் சொல்கிறோம்.**

கருணாநிதியின் ஆட்சி காலக்கொடுமைகள், பத்தினிப் பெண்டிரின் சாபம், லஞ்ச, லாவண்யங்கள் இவற்றை மட்டுமல்ல...

இவற்றை விட பேரபாயமான...கருணாநிதியின் தேச விரோத சிந்தனையை-பிரிவினை விஷப் பிரச்சாரத்தை, அமைதிப் பூங்காவாகத் திகழும் தமிழகத்தை அமளிக்காடாக்கத் துடிக்கும் பேயுள்ளத்தை அடுக்கடுக்கான ஆதாரங்களோடு தேர்தல்களத்தில்சுட்டிக்காட்டினோம்.

**இன்றைக்கு ஆதாரங்களுக்காக நாம் அலைய வேண்டியதில்லை. அவரது தற்போதைய பேச்சுக்களே அதற்குச் சாட்சியங்களாக விளங்குகின்றன.**

இலங்கைத் தமிழர் பிரச்சினையைக் காட்டித் தமிழகம் தனி நாடாகும் என்பது போல மிரட்டியிருக்கிறார்.

**பிரிவினைவிஷம் கக்கும் கருணாநிதிக்குப் பின்னாலே அந்நிய சக்தி இருக்கிறது என்பதை ஆதாரங்களோடு சுட்டிக் காட்டினோம்.**

அதை நாடு நன்றாக உணர்ந்தது. கருணாநிதி தனது ஆட்சிக் காலத்தில் அடித்த கொள்ளை அதிகம் தான்.

ஆனால் ... நடந்து முடிந்த தேர்தலில்... "பெய்த மழையை விட வந்த வெள்ளம் அதிகம்" என்பது போல அவர் அடித்த கொள்ளைக் கணக்குகளை எல்லாம் மீறி வெள்ளமெனப் பணம் வந்தது.

**கடல் கடந்து வந்த பணம்- கள்ள ஓட்டு இரண்டும் தன்னைக் காப்பாற்றும் என்று கருணாநிதி நம்பினார். கவிழ்ந்தார்.**

புதுவையிலாவது ஏதாவது செய்யமுடியாதா என்ற நப்பாசையில் ஏதேதோ பேசுகிறார். அதிலும் சாதுர்யம் இல்லை. பச்சையாக தேசவிரோதச் சிந்தனையை வெளிப்படுத்தி விடுகிறார்.

பிரிவினை விஷம் கக்கும் கருணாநிதி - ராஜாமான்சிங்கின் மரணம் பற்றியும் ஒப்பாரி வைக்கிறார்.

**ராஜாமான்சிங்கின் மரணம் கவலைக்குரியது. ஒரு முதலமைச்சரைக் கொலை செய்ய நடந்த முயற்சியும் அதைப்போலவே கவலைக்குரியது. கண்டனத்துக்குரியது.**

**ராஜாமான்சிங் மரணத்தால் ஒரு முதலமைச்சர் பதவிவிலகியிருக்கிறார். நீதி விசாரணைக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது.**

"எனது கணவரின் கொலையை ஒட்டி நீங்கள் எடுத்த நடவடிக்கைகளுக்காக எனது நன்றியைத் தெரிவிக்கிறேன். நீங்கள் நீதி வழங்குவீர்கள் என்று நம்புகிறேன்" என்று கொலையுண்ட மன்னர் மான்சிங்கின் மனைவி பிரதமர் ராஜீவிற்குக் கடிதம் எழுதியிருக்கிறார்.

**ஆனால்... உள்ளூர் விவகாரம் பற்றி ஒன்றும் பேச முடியாத "உதயகுமார் புகழ்" கருணாநிதி மன்னர் மான்சிங்கிற்காக அதிகமாகவே கவலைப்படுகிறார்.**

புதுவை மக்களும் மிகமிகத் தெளிவாகவே இருக்கிறார்கள். என்ற உண்மை மார்ச் 5-ஆம் நாள் கருணாநிதிக்கு உணர்த்தப்படும்.

மகாகவி பாரதியும், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும், தியாகசீலர் அரவிந்தரும் வாழ்ந்த புதுவை மண்ணில் - கருணாநிதியின் தேசத் துரோகம் விலைபோகப் போவதில்லை!

திருச்சிமாவட்ட

## அண்ணா ஆட்டோ தொழிலாளர் சங்கம்

திருச்சி, மார்ச், 1- திருச்சிமாவட்ட அண்ணா ஆட்டோ தொழிலாளர் சங்கத்தின் கவுரவத்தலைவராக கே. பெருமாள் தலைவராக பி. கருப்பசாமி, துணைத்தலைவர்களாக ஏ. அழகப்பன், பி. தினகரன் செயலாளராக எஸ். என் முகமதுயூசுப், துணை செயலாளராக ஆர். டி.மூர்த்தி, ஜெயக்கொடி அமைப்புச் செயலாளராக கே.வாசுதேவன், பொருளாளராக பி.மருதைராஜ் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாவட்ட பிரதிநிதிகளாக 5 பேரும் செயற்குழு உறுப்பினர்களாக 15 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## ஏலவிற்பனை

1. C. Jabarchand 116 AnnaPillaiStreet, Madras 79 (24-8-82 முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 11-3-25 அன்று காலை10 மணிக்கும்,

2. B. Devaraj Jain, 66. Baliamman koil Street' Madras-49 (1-3-83 முதல் 30-3-83 வரை) ஏலத்தேதி 11-3-85 அன்று மதியம் 12 மணிக்கும்,

3. Mittalal Jain No: 38 Village Road, Nung mbakkam Madras - 34 (1.2.83 முதல் 10.1.84 வரை) ஏலத்தேதி 11.3.85 அன்று மதியம் 12 மணிக்கும்.

4. C. Vasanthraj Jain No. 52 Perumal Koil Garden Street Madras-79. (1-1-83முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 11-3-85 அன்று மதியம் 1 மணிக்கும்

5- Ratan & Co, No -31, P.E.KoilStreet, Ayanavaram Madras. 23. (24-8 82முதல் 31-12-83வரை) ஏலத் தேதி 11-3-85 அன்று மதியம் 1மணிக்கும்,

6. R Devara' Sowcar, No:84, Ramamoorthicolony. Thiru vi-ka-nagar, Madras-82 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 25-2 85 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 12-3-85 அன்று மதியம்2மணிக்கும்.

7. Mittalal Jain, N ; 14, RamamoorthiColony. Thiru-vi-ka Nagar, Madras-82 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 21-1-85 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 12-3-85 அன்று காலை 10 மணிக்கும்,

8. Mahaveer No: 328 Konnur High Road, Aynavaram, Madras- 23, (31-12-79க்கு முன்பும், 21-8-82 முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 12-3-85 அன்று பகல் 12 மணிக்கும்,

9) K. Gyan Chand Jain, NO:125, Paper mills Road, Peravallore, Madras- 89, (1-2-83 முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 12-3-85 அன்றுகாலை 10மணிக்கும்,

10) G. Saroj Devi, 15, Chandrayogi Samathi Street Madras-12 (1-2-83 முதல் 9-1-84 வரை) ஏலத்தேதி 13-3-85 அன்று காலை 10 மணிக்கும்,

11) B. Shawari KanWar Parekh, No. 19 Angappa Naicken Street, Madras-1 (1 1-83 முதல் 12-12-83 வரை) ஏலத்தேதி 13-3 85 அன்று காலை 11 மணிக்கும்

12. C. Hema R m No. 63, R. A. puram. Kamaraisalai, Madras-28 (1.8.83 முதல் 31 12.83 வரை) ஏலத்தேதி 13 3 85 அன்று மதியம் 1 மணிக்கும்,

13 S ChandmalJain. 154. P. T. H. Road. madras-12 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 25 2 85 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 13-3-85 அன்று மதியம் 2 மணிக்கும்,

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கிகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சந்த் ஜெயின், 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்.

26 மாணவர்களுடன் தொடங்கப்பட்ட பள்ளியில் இன்று

6 ஆயிரம் மாணவ - மாணவியர் பயிலும் சிறப்பு

# தமிழகத்திற்கு பெருமை சேர்க்கும் எம்ஜிஆர்.பள்ளி:கவர்னர்பாராட்டு

### உழைப்பால் உயர்ந்த எம். ஜி. ஆரைப்போல மாணவர்கள் வாழ்வில் முன்னேற டாக்டர் நாவலர் வாழ்த்து

**சென்னை, மார்ச் 1- தமிழகத்திற்கு பெருமை சேர்க்கும் வகையில் எம்.ஜி.ஆர். பள்ளி சிறந்து விளங்குகிறது என ஆளுநர் குரானா, பள்ளியின் பள்ளி விழாவில் பேசுகையில் கூறினார்.**

சென்னை வடபழனியில் அமைந்துள்ள எம்.ஜி.ஆர். ஆரம்ப மற்றும் மேல் நிலைப் பள்ளிகளின் வெள்ளி விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது

சத்யா கல்வி மற்றும் அறக்கட்டளையின் சார்பில் சென்னை வள்ளுவர் கோட்டத்தில் இவ்விழா நடைபெற்றது.

விழாவுக்கு முன்னாள் சபாநாயகர் ராசாராம் தலைமை வகித்தார்.

தமிழக ஆளுநர் குரானா சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டு வெள்ளி விழா உரைநிகழ்த்தினார்.

தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் வெள்ளி விழா மலரை வெளியிட்டார்.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் பரிசுகளை வழங்கினார்.

எம். ஜி. ஆர். பள்ளியின் மேலாளர் வி. என். நாராயணன் வரவேற்றார்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு புரட்சித் தலைவரால் தொடங்கப்பட்ட எம்.ஜி.ஆர். பள்ளி இன்று மேல்நிலைப்பள்ளியாக வளர்ந்தோங்கி வெள்ளி விழாவைக் கொண்டாடுகிறது.

### வியத்தகு வளர்ச்சி

வெள்ளி விழா நிகழ்ச்சியில் அனகாபுத்தூர் ராமலிங்கம் எம். எல். சி., 'அண்ணா' பத்திரிகையின் நிர்வாக இயக்குனர் கே. ரவீந்திரன், வீட்டு வசதி வாரியத் தலைவர் ஏ. செல்லையா, சுகுமார் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

எம். ஜி. ஆர். பள்ளி மாணவ-மாணவிகளின் கலை நிகழ்ச்சி நடைபெற்றது.

விழாவில் கலந்து கொண்டு ஆளுநர்குரானா பேசுகையில் கூறியதாவது:-

எம். ஜி. ஆர். பள்ளி 25 ஆண்டுகளுக்கு முன் 26 பிள்ளைகளுடன் தொடங்கப்பட்டது. தமிழக முதல்வரால் துவங்கப்பட்ட இந்தப் பள்ளியில் இப்போது6,000 பேர்களுக்கு மேல் படிக்கிறார்கள் என்பதைக் கேட்டபோது பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது.

தமிழக முதல்வர் உழைப்பால் உயர்ந்தவர். முதல்வர் எம். ஜி. ஆரை முன்மாதிரியாக வைத்து இந்தப்பள்ளியின் பிள்ளைகள் படித்து முன்னேற வேண்டும்என்று வாழ்த்துகிறேன்.

பள்ளியைத் துவக்கியது மட்டுமல்ல, இந்த பள்ளிக்கு தமிழக முதல்வர் நிலமும் கொடுத்திருக்கிறார் என்பதைஎண்ணும் போது பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது.

தமிழகத்திற்கு பெருமைச் சேர்க்கும் வகையில் இப்பள்ளி இயங்குவது கேட்டு மகிழ்ச்சியடைகிறேன்.

இவ்வாறு ஆளுநர் குரானா கூறினார்.

### நிதியமைச்சர் நாவலர்

வெள்ளிவிழா மலரை வெளியிட்டு தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசுகையில் கூறியதாவது:-

வாழ்க்கையில் நலிவுற்று வாழும் கலைஞர்களுக்காகத் தன்னுடன் பணிபுரியும் கலைஞர்களின் குழந்தைகள் படிக்க வேண்டும் என்பதற்காக 25 ஆண்டுகளுக்கு முன்பு முதல்வர் புரட்சித்தலைவர் இந்த பள்ளியை துவக்கினார்.

25 ஆண்டுகளுக்கு முன் ஆரம்ப பள்ளியாக துவக்கப்பட்ட எம். ஜி. ஆர். பள்ளி இன்றைக்கு ஆல் போல் தழைத்து வளர்ந்து, மேல்நிலைப் பள்ளியாக திகழ்கிறது.

26 மாணவர்களுடன் சாதாரண பள்ளியாக இருந்தது. இப்போது 6,000க்கும் மேற்பட்ட மாணவர்களைப் பெற்று சிறப்பாக நடைபெறுகிறது.

### கலை நிகழ்ச்சி

இந்தியாவிலேயே கல்வியில் தமிழகம் இரண்டாவதுஇடத்தைப் பெற்றிருக்கிறது.

தமிழகத்தில்46சதவீதம் பேர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள்.

நாம் ஜப்பானைப் போல, அமெரிக்காவைப் போல வளர வேண்டும் என்று ஆசைப்படுகிறோம் அப்படி வளரவேண்டுமானால், அந்த அளவுக்கு கல்வியில் நாம் உயர வேண்டும்.

கல்வி வளர்ச்சிதான் நாட்டின் விஞ்ஞான, பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தும்.

முதல்வர் புரட்சித் தலைவர் இன்றைக்கு தமிழகத்தில் சத்துணவு திட்டத்தை செயல்படுத்தி வருகிறார்.

### முதல்வர் விருப்பம்

ஏழை, எளிய மக்களின் குழந்தைகள் வறுமை காரணமாக, படிக்காமல் இருக்கக் கூடாது என்று தான் புரட்சித்தலைவர் சத்துணவு திட்டத்தைக் கொண்டு வந்தார்.

முதல்வர் புரட்சித் தலைவர் தனது மூன்றாவது வயதில், ஏழ்மையின் வறுமையின் துன்பத்தை உணர்ந்தவர் தனது வாழ்வில்பட்ட்துன்பஅனுபவம் இன்றைய ஏழை எளிய மக்களின் குழந்தைகளுக்கு ஏற்படக் கூடாது என்றுதான் சத்துணவு திட்டத்தையே ஆரம்பித்தார்.

உழைப்பால் உயர்ந்த தலைவர்புரட்சித்தலைவர். அவரைப்போல மாணவ-மாணவிகளும் வாழ்வில் உழைத்து முன்னேற வேண்டும்.

எம். ஜி. ஆர். பள்ளி மாணவர்கள் நன்கு படித்துசிறப்பானபெயரை பள்ளிக்கு பெற்றுத்தர வேண்டும்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

# நாமக்கல் தொகுதி: அருணாசலம் நன்றி அறிவிப்பு

**சேலம், மார்ச். 1- நாமக்கல் சட்டமன்றத் தொகுதியில் அருணாசலம் எம். எல். ஏ. கிராமம் கிராமமாகச் சென்று மக்கள் குறைகளைக் கேட்கிறார்.**

சேலம் மாவட்டத்தில் உள்ள நாமக்கல் சட்டமன்ற தொகுதி கழகஉறுப்பினர் இரா.அருணாசலம் வரும் 4, 5, 6 ஆகிய தேதிகளில் 25க்கும் மேற்பட்ட கிராமங்களில் சுற்றுப் பயணம் செய்து மக்களுக்கு நன்றி தெரிவித்து குறைகளைக் கேட்கிறார்.

நாமக்கல் சட்டமன்றத் தொகுதியில் 4-ந் தேதியன்று முத்துகாப்பட்டி, பழையபாளையம், சீவநாய்க்கன்பட்டி, போடிநாயக்கன்பட்டி, அலங்காநத்தம், கொடிக்கால் புத்தூர், கணவாய்ப்பட்டி, பொம்மசமுத்திரம், ரெட்டிப்பட்டி ஆகிய கிராமங்களில் சென்று அருணாசலம் நன்றி தெரிவிக்கிறார். அந்த பகுதியில் மக்களுக்கு தேவையான வசதிகள் பற்றியும் கேட்கிறார்.

5-ந் தேதி யன்றுசெவந்திப்பட்டி, வாழவந்தி, மேட்டுப்பட்டி, வடவத்தூர், காவக்காரன் பட்டி, கோணங்கிப்பட்டி முட்டாஞ்செட்டி, வரதராஜபுரம், பவித்திரம் புதூர் ஊராட்சி, பவித்திரம் ஆகிய ஊர்களுக்கு சென்று மக்களைசந்தித்து பேசுகிறார்.

6-ந் தேதியன்று புதுக்கோட்டை, திப்பிரமகாதேவி, பொட்டி ரெட்டிப்பட்டி, தேவராயபுரம், எருமப்பட்டி, ஆகிய கிராமங்களுக்கு அருணாசலம் எம் எல்.ஏ.சென்று நன்றி கூறுகிறார்.

# காளிமுத்து கோரிக்கை...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

ராமன் மறுத்து விடவே பின் லட்சுமணனிடம் சென்று தன்னை மணமுடிக்குமாறு கெஞ்சினாளாம். ராமன்தான் என்னை மணமுடிக்க மறுத்துவிட்டான். நீயாவது என்னை மணந்து கொள் என்றாளாம். அதற்குப்பின் தான் சூர்ப்பனகையின் பேராசைக்கு பாடம் கற்பிக்கும் வகையில் அவளது மூக்கை அறுத்தான்.

### நீலிக்கண்ணீர்!

அதுபோல் தமிழகம் என்ற ராமனால் புறக்கணிக்கப்பட்ட சூர்ப்பனகையான தி. மு. க. புதுவை என்ற லட்சுமணனிடம் கெஞ்சுகிறது' சூர்ப்பனகைக்குஏற்பட்ட கதை தி. மு. க. வுக்கும் இங்கு ஏற்படப் போகிறதென்பதை மக்களின் எழுச்சி தெளிவாகக் காட்டுகிறது.

இலங்கை தமிழர்களுக்காக இன்றுநீலிக்கண்ணீர் வடிக்கும் கருணாநிதி தனது ஆட்சிக் காலத்தில் என்னசெய்தார் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

### கச்சத்தீவை தாரைவார்த்த கருணாநிதி

கருணாநிதி ஆட்சியில் இருந்த போது, தான் கச்சத்தீவு இலங்கைக்கு வழங்கப்பட்டது. கச்சத்தீவை இலங்கைக்குவழங்க மத்திய அரசு தானே முடிவெடுக்கவில்லை, அப்போதுதமிழகத்தின் முதல்வராக இருந்த கருணாநிதியிடம் கேட்டது உடனே கருணாநிதியும் கச்சத்தீவை இலங்கைக்கு தரச் சொன்னார்.

அதற்கு பின் கண் துடைப்புக்காக சாக்கு போக்கு சொல்லி மக்களிடம் நல்ல பெயர் எடுப்பதற்காக இலங்கைக்கு கச்சத்தீவை கொடுத்தது தவறு என்றார்.

இலங்கைத் தமிழரின் துயருக்கு கருணாநிதி தான் காரணம். ஆடுகிற கட்சியாக இருக்கும் தி. மு. க. தமிழகத்தில் ஆளும் கட்சியாக முயன்று தோற்று எதிர்கட்சி அந்தஸ்தை கூட இழந்து இங்காவது இடம் பிடிக்கலாமா என்றுவந்துள்ளது. கருணாநிதி மக்களிடம் அனுதாபத்தை பெறுவதற்காக, திருப்பத்தூரில் கொசுறு போல் தனக்கு ஒருஇடம் கொடுக்கக் கூடாதா என்கிறார். மக்களாட்சியை ஏதோ பல சரக்கு கடை வியாபாரம் போல், எண்ணி பேசுகிறார். கருணாநிதிக்கு இங்கும் தகுந்த பாடம் புகட்டுங்கள்.

### மார்க்கண்டேயர்

சிவபெருமான் என்ற மக்கள் சக்தியால்புரட்சித் தலைவர் என்ற மார்க்கண்டேயனுக்கு வந்த ஆபத்து நீங்கி இன்றுஅவர் நலம் பெற்று சிறப்புற பணியாற்றுகிறார்.

புதுவையின் தனித்தன்மைக்கு பாதகம் ஏற்படாது பாதுகாப்பதோடு இதன் பெருமைக்கு பழுது ஏற்படாதும், கழகம் பாதுகாக்கும். இதை புரட்சித் தலைவரின் கருத்தாக உங்களுக்கு தெரிவிக்கிறேன்.

இந்திய துணைக் கண்டத்திலேயே, சிறப்பு பெற்ற மாநிலமாக புதுவை விளங்க கழகம், காங்கிரஸ் அணிக்கு வாக்களியுங்கள். கழகம், காங்கிரஸ் கூட்டணி புதுவைக்கு மேலும் வலிவையும் வளத்தையும் ஊட்டும். இந்த அணிக்கு வாக்களித்து வெற்றி பெறச் செய்யுங்கள். மீண்டும் உங்களை வெற்றி விழாவில் சந்திக்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் கா.காளிமுத்துபேசினார்.

இந்தக் கூட்டங்களில் பி.சண்முகம் எம்.பி, கழக தலைமை நிலைய செயலாளர் துரை கோவிந்தராசன், புதுவை மாநிலக் கழகச்செயலாளர் பி.கே. லோகநாதன்மற்றும் பலர் பங்கேற்றுப் பேசினர்.

### அமைச்சர் காளிமுத்து பேச்சுநாடா ஒலிபரப்பு

அமைச்சர் காளிமுத்து புதுவை மாநில கழக அணி வேட்பாளர்களை ஆதரித்து, தேர்தல்கூட்டங்களில் பேசிய கருத்துக் கருவூலங்களை கழகத் தோழர்கள் நாடாவில் பதிவு செய்து பல இடங்களில் ஒலிபரப்பி வருகின்றனர்.

### கவர்னர் குரானா66-வது பிறந்தநாள்

சென்னை, மார்ச். 1— தமிழக கவர்னர் குரானாவிற்கு இன்று 66வயது. அவருக்கு பாண்டிச்சேரிக்கு செல்லும் வழியில் சென்னை வந்த பிரதமர் ராஜீவ் காந்தி பிறந்த நாள் வாழ்த்து தெரிவித்தார். அமைச்சர்கள், முன்னாள் சபாநாயகர் ராசாராம், உயர் அதிகாரிகள் ஆகியோர் அவருக்கு பிறந்த நாள் வாழ்த்து தெரிவித்தனர்.

மாநகராட்சியில்

### மரங்களை அறுக்க புதியகருவி

சென்னை, மார்ச் 1— சென்னை மாநகரில் புயல் மழை போன்றவற்றால் சாலையோர மரங்கள்சரிந்துபாதையை அடைத்துக் கொள்கின்றன.

சரிந்த மரங்களை அவ்வப்போது அறுத்து அப்புறப்படுத்த 16 ஆயிரம் ரூபாயில் மின்சார ரம்பத மாநகராட்சி வாங்கியுள்ளது.

பொது மக்களும் இதனை வாடகைக்கு பெற்றுக் கொள்ளலாம். ஒரு மணி நேரத்திற்கு 20 ரூபாய் வாடகை வசூலிக்கப்படுகிறது. மின்சார ஜெனரேட்டருடன் 30ரூபாய்க்கு வாடகைக்கு தரப்படுகிறது.

பொது மக்களின்தேவை அதிகமானால் இது போன்ற மின்சார ரம்பங்களை அதிக அளவில் வாங்கஇருப்பதாக மாநகராட்சி சிறப்பு அதிகாரி செ. ராம்தாஸ் தெரிவித்தார்.

### வைஜயந்திமாலா கார்மீது கல்வீச்சு

பாண்டிச்சேரி, மார்ச் 1- பாண்டிச்சேரி லாஸ்பேட்டை தொகுதியில் இந்திரா காங்கிரஸ் சார்பில் வைஜயந்திமாலா எம். பி. தேர்தல் பிரச்சாரம் செய்து கொண்டிருந்தார். அப்போதுஅவர் சென்ற கார்மீது கல்வீசப்பட்டது. ஆனால் அதில் வைஜயந்திமாலா விற்கு காயம் ஏதும் ஏற்படவில்லை. கல்வீச்சுகுறித்து போலீசார் வழக்குப்பதிவு செய்து விசாரணை நடத்தி வருகின்றனர்.

### இ. காங்கிரஸ் வேட்பாளர் சுட்டுக்கொலை

பாட்னா, மார்ச். 1- பாட்னா மாவட்டத்தில் மகௌரி தொகுதியில் இந்திரா காங்கிரஸ் சார்பில் போட்டியிடும் வேட்பாளர் ஞானேஸ்வர் பிரசாத் சுட்டுக் கொல்லப்பட்டார். தேர்தல் அலுவலகத்தில் அவர் உட்கார்ந்து இருக்கும்போது சுடப்பட்டார். இவரை நக்சல்பாரிகள் சுட்டிருப்பார்கள் என்று கூறப்படுகிறது.

இத்துடன் பீகாரில் 3 வேட்பாளர்கள் கொல்லப்பட்டுள்ளனர்.

இதனால்இந்த3தொகுதிகளிலும் தேர்தல் ரத்து செய்யப்பட்டுள்ளது.

## ரயில்வே வருமானம் அதிகரிப்பு

புதுடெல்லி, மார்ச். 1- கடந்த 84 ஏப்ரல் முதல் தேதி முதல், 1985 பிப்ரவரி 10-ம் தேதி வரையில், ரயில்வேயின் மொத்த வருவாய் சுமார் ரூ. 4,561.23 கோடி. சென்ற ஆண்டு இதே காலத்தில் ரயில்வேயின் வருவாய் ரூ. 4,254. 06 கோடியாக இருந்தது.

பயணிகள் ரயில் மூலம் வருவாய் ரூ. 1,239.22 கோடியும் மற்றவாகன்கள் மூலம்ரூ. 137.07கோடியும் சரக்கு வாகன்கள் மூலம் ரூ. 3,095.64 கோடியும் இதரவகைகளின் மூலம் ரூ.89.30 கோடியும் வருவாய் கிடைத்துள்ளது.

சுயவேலை வாய்ப்பு:

## கிராம இளைஞர்கட்கு கடனுதவி

மதுரை, மார்ச் 1— சர்வதேச இளைஞர் ஆண்டினையொட்டி படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கு, மதுரை மாவட்டத்தில் பழனி தாலுக்காவில் உள்ள கீரனூரில் நடைபெற்ற சாண எரிவாயு திட்ட சுய வேலை வாய்ப்பு பயிற்சி முகாமின், நிறைவு நாள் விழாவில் ரூ. 1,25 லட்சம் கடன் தொகையினை காந்தி கிராம மேனேஜிங் டிரஸ்ட்டியும் கதர் கிராமத்தொழில்கள் கமிஷன் சான்றுதல் கமிட்டியின் தலைவருமான வி. பத்மநாபன் வழங்கினார். இந்த கடன்களுக்கு கனரா வங்கியின் கீரனூர் கிளை ஏற்பாடு செய்தது. வங்கி வழங்கியுள்ள இந்தகடன்தொகையில் 25 சதவீதம், மத்திய மாநில அரசின் மான்யமாகும்.

6 ம் பத்தி தொடர்ச்சி

செயலாளர் ப.உ.ச. முன்னிலை வகிக்கிறார். அமைச்சர்கள், பிரமுகர்கள் வாழ்த்துகிறார்கள்.

# தேர்தல் களம்

புதுவை மாநிலம்

## உருளையன்பேட்டை - உப்பளத்தில் தீவிர வாக்கு சேகரிப்பு

பாண்டிச்சேரி, மார்ச். 1- புதுவை மாநிலத்தில் உப்பளம். உருளையன்பேட்டை, நெல்லித்தோப்பு ஆகிய சட்டமன்றத் தொகுதிகளில் கழக வேட்பாளர்கள் வீடுவீடாகச் சென்று தீவிரமாக வாக்கு சேகரித்து வருகின்றனர்.

உப்பளம் தொகுதியில் வீடு வீடாகச் சென்று கழகவேட்பாளர் பி.கே. லோகநாதன் வாக்கு கேட்டார். அவரை மக்கள் சிறப்பாக வரவேற்றனர். வீதியெங்கும் "இரட்டை இலைக் கோலம்" இட்டு பெண்கள் அவரை ஆரத்தி எடுத்து வரவேற்றனர்.

கோலாஸ் நகர் ராஜ உடையார் தோட்டம், என்ஜீனியர் தோட்டம், தாவீது பேட்டை, பிரான்சுவா தோட்டம் வீரர் வெளி ஆகிய பகுதிகளில் கிராம மக்கள் குலவையிட்டு வரவேற்று மாலை அணிவித்தார்கள். அவருக்கு கோவில் பிரசாதம் வழங்கினார்கள்.

வம்பாகீரப் பாளையம் மீனவர் பகுதியில் பெத்து செட்டிப் பேட்டை கழக கிளைச் செயலாளர் இராஜாக்கண்ணு தலைமையில் 100-க்கும் மேற்பட்டவர்கள் பி.கே. லோகநாதனுக்குஆதரவாக வீடுவீடாகச்சென்றுஓட்டு கேட்டார்கள். புவிவேந்தன் தலைமையில் எம். ஜி. ஆர். மன்றத்தினர் ஓட்டு சேகரித்தார்கள்.

### நெல்லித்தோப்பு

நெல்லித்தோப்பு தொகுதி கழக வேட்பாளர் பா. மணிமாறனை ஆதரித்து சாரதி நகர், எம்.ஜி.ஆர். இளைஞர் அணியினர் அருள் மணி தலைமையில் ஆபேல், மோகன், குமார், கிருஷ்ணமூர்த்தி, கோதண்டம், சம்பத், தாஸ், சேகர் ஆகியோர் வீடு வீடாகச் சென்று பெண்கள் காலில் விழுந்து ஓட்டு கேட்டனர்.

### உருளையன் பேட்டை

உருளையன்பேட்டை கழக வேட்பாளர் டாக்டர் எம். ஏ. எஸ். சுப்பிரமணியன்வீடுவீடாகச் சென்று ஓட்டு கேட்ட போது, பெண்களும், ஆண்களும் மகிழ்ச்சியுடன்சிறப்பாக வரவேற்றார்கள். "எங்கள்வாக்குஇரட்டை இலைக்கே" என்று கூறி மகிழ்ச்சிக் குரல் எழுப்பினார்கள்.

அவருடன் முன்னாள் சபாநாயகர் முருகு. பத்மநாபன், கோ. வேணுகோபால் முன்னாள் எம். எல்.ஏ உள்பட பலர் சென்றார்கள்.

சேர்ந்த 2ஆயிரம்பேர்கள் கழக சங்கத்தலைவர் எம். பி. நந்தன் தலைமையில் உப்பளம் உருளையன் பேட்டை நெல்லித்தோப்பு மற்றும் கழக இ.காங்கிரஸ் தொகுதிகளில்ஊர்வலமாகச் சென்று பொதுமக்களிடம் ஓட்டு வேட்டையாடினார்கள்.

### தந்தை பெரியார்

தந்தை பெரியார் போக்கு வரத்துக் கழக அண்ணா தொழிற்சங்கத் தலைமை நிர்வாகிகள் தலைவர் தென்றல் மணி, பொதுச் செயலாளர் ரங்கநாதன், பொருளாளர் பாலகிருஷ்ணன் ஆகியோர் தலைமையில் 50 பேர்கள் புதுவைக்கு சென்று கழக வேட்பாளர்களுக்காகவும். இ.காங்கிரஸ் வேட்பாளர்களுக்காகவும்தீவிரமாகஓட்டுசேகரித்தார்கள்.

கழகம், இந்திரா காங்கிரஸ் கூட்டணி வேட்பாளர்களை ஆதரித்து முன்னாள்பாராளுமன்றஉறுப்பினர் முனுசாமி தலைமையில் கழகத் தோழர்கள் உமாபதி, இராதா கிருஷ்ணன், புவிவேந்தன், பெருமாள், அன்னபூரணிஅம்மாள் உள்பட பலர்ஒன்றுசேர்ந்துவீடு வீடாகச்சென்று பொது மக்களிடம் ஓட்டுக் கேட்டார்கள்.

### ரிக்ஷா தொழிலாளர்கள்

அண்ணாரிக்ஷா தொழிலாளர்கள் சங்கத்தைச்

### திருமணம்

கழகத் தோழர் கே.ஏ. விழிவேந்தனுக்கும் டாக்டர் கலைச்செல்விக்கும்வரும் 4ந் தேதிகாலை 9 மணிக்கு வேலூர் காந்தி நகர், தனபாக்கியம் கிருட்டிணசாமி திருமணக் கூடத்தில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் மணவிழாவை நடத்தி வைக்கிறார். கழக பொதுச்

5-ம் பத்தி பார்க்க





## சாதனை புரிவது இ. காங்கிரஸ்- வேதனை தருவது தெலுங்கு தேசம்

ஐதராபாத், மார்ச்.1— மக்களுக்கு நன்மைகள் செய்து சாதனை புரிவது, இந்திரா காங்கிரஸ். ஆனால் அதே சமயத்தில் வேதனை தருவது தெலுங்கு தேசக்கட்சி என்று பிரதமர் ராஜீவ்காந்தி ஐதராபாத்தில் நடைபெற்ற ஒரு தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் தெரிவித்தார்.

இந்திய குடியரசுக் கட்சி

## தமிழ் மாநில அமைப்புக்கு கூடுதல் பொதுச்செயலர்

சென்னை, மார்ச்.1— இந்திய குடியரசுக் கட்சியின் தமிழ் மாநில அமைப்பிற்கு செ. கு. தமிழரசன் எம். எல். ஏ. கூடுதல் பொதுச்செயலாளராகவும், பி. டி. ராம் துணைத் தலைவராகவும் என். வி ஜெயசீலன் அமைப்புச் செயலாளராவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

சென்னையில் கூடிய இந்திய குடியரசுக்கட்சி (கோபர்கடே) தமிழ் மாநில செயற்குழு கூட்டத்தில் இந்த முடிவுகள் எடுக்கப்பட்டன என்று

நீர்நிலை தண்ணீர் குறைவு

## மின் நிலையங்கள் சீரமைப்புப் பணி: மின்வெட்டு அமுல்



அமைச்சர் பண்ருட்டி தகவல்

சென்னை, மார்ச். 1- புனல் மின்நிலையங்களில் நீர் பற்றாக்குறையாலும், மின் நிலையங்கள் சீரமைப்பதாலும் மின்வெட்டு அமல் செய்யப்படுகிறது என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தெரிவித்துள்ளார்.

தமிழக மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

தமிழகத்தில் இந்த ஆண்டு புனல் மின்நிலையங்களில் போதுமான அளவு தண்ணீர் இல்லை, மற்றும் அனல் மின் நிலையங்களின் மின் உற்பத்தி மற்றும் நெய்வேலி கல்பாக்கம் மின்நிலையங்களுக்கு சீரமைப்பு பணிகள் நடைபெறுகிறது.

### வெட்டு எவ்வளவு?

இவைகளையெல்லாம் கணக்கில் கொண்டு மின்வெட்டினை அதிகரிக்க தீர்மானிக்கப்பட்டுள்ளது. மின்வெட்டு அமல்படுத்தப்படுகிறது.

உயர் அழுத்த தொழிற்சாலைகளுக்கு மின்தேவையிலும், சக்தியிலும் முறையே 30 சதவிகிதம் இருந்த மின்வெட்டு1-3-85 முதல் 40 சதவிகிதத்திற்கு அதிகரிக்கப்படுகிறது.

மின்சாரத்தை அதிகம் பயன்படுத்தும் உயர் அழுத்தத் தொழிற்சாலைகளுக்கு மின்தேவையிலும் சக்தியிலும் முறையே 30 சதவிகிதம் இருந்த மின்வெட்டு 1-3-85 முதல் 50 சதவிகிதத்திற்கு அதிகரிக்கப்படுகிறது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தெரிவித்துள்ளார்.

வி. பி. முருகையன் தெரிவித்துள்ளார்.

3 தொகுதிகளில் போட்டியிடும்

## ராமராவ் பற்றி ராஜீவ் கிண்டல்

காளஹஸ்தி. மார்ச், 1- ஆந்திர சட்டசபை தேர்தலில் முதல் மந்திரி ராமராவ் 3 தொகுதிகளில் போட்டியிடுவதை பிரதமர் ராஜீவ் காந்தி கிண்டல் செய்துள்ளார்.

ஒருவர், ஒரு தொகுதியில் போட்டியிடுவதை நம்மால் புரிந்துகொள்ளமுடியும். ஒருவர் 2 தொகுதியில் போட்டியிடுவது வழக்கமாக இருந்து வருகிறது. ஆனால் ஒருவர் மூன்று தொகுதிகளில் போட்டியிடுவதைத் தான் புரிந்து கொள்ள முடியவில்லை என்று ராஜீவ் கூறினார்.

என். டி, ராமராவ் தனது பாரத தேச கட்சியைத் தொடங்கிவிட்டால் எல்லா மாநிலங்களிலும் போட்டி போடுவாரா? என்றுராஜீவ்கிண்டலாகக் கேட்டார்.